[10th September 1960

இடத்திற்குக் கொண்டுபோகவேண்டியிருக்கிறது. இட சௌகரியம் இல்லாததால் கொஞ்சகொஞ்சமாக, "பெஸ்ட் ப்ரோக்ராமா" கத்தான் செய்யமுடியும்.

*Cauvery waters*

* 610 Q.—SRI A. VEDARATHNAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) காவிரியில் தண்ணீர் தட்டு ஏற்பட்டதற்கு மைசூர் அரசாங்கத்துடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தில் நிகழ்ந்த மாறுதல் காரணமா?

(ஆ) கண்ணம்பாடி அணையில் எத்தனை அடிக்கு மேல் தண்ணீர் இருந்தால் அது சென்னை மாநிலத்திற்குக் கிடைக்கும்?

(இ) இப்படி தண்ணீர் தட்டு காவிரியில் ஏற்படும் சமயத்தில் மைசூரிலிருந்து உதவிபெற்று பின் அதை ஈடு செய்ய ஏதேனும் மார்க்கமுண்டா? அப்படியானல் அதன் விவர மென்ன?

THE HON. SRI P. KAKKAN: (a) No, Sir. There has been no change or revision in the Madras-Mysore Agreement on Cauvery waters.

(b) The question of level in Krishna Raja Sagar has no connection with our rights. The flows due to us are being sent every day.

(c) Generally when we have difficulties due to a poor monsoon, Mysore may not also be better off. So there will be no chances of borrowing irrigation supplies from Mysore and returning it afterwards.

SRI A. VEDARATHNAM: இந்த சபையிலேயே இதற்கு முன் பல அங்கத்தினர்களால், காவேரிக்கு வருகிற தண்ணீரை அதன் உபநதிகளை மைசூர் அரசாங்கம் கட்டுப்படுத்தி அந்தத் தண்ணீரை அவர்கள் பயன்படுத்திக்கொள்வதாக . . .

MR. SPEAKER: கனம் அங்கத்தினர் அவர்கள் ஒன்று ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு வாரத்திற்கு முன் கனம் நிதியமைச்சர் அவர்கள் சொன்னார்கள், இதர மாகாணங்களைப் பற்றி நாம் பேசும்போது கொஞ்சம் ஜாக்கிரதையாக பேசவேண்டுமென்று. கனம் அங்கத்தினர் அவர்கள் இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்வார்கள் என நினைக்கிறேன். அதனால்தான் ஸ்ரீனிவாஸ ஐயர் அவர்கள் கொடுத்த கேள்விக்குக்கூட அனுமதி கொடுக்கவில்லை. இது சில நாட்களுக்கு முன் கொடுத்த கேள்வி. ஆகவே, உப கேள்வி கேட்கும்போது அதை அனுசரித்து கேட்கவேண்டும். மைசூர் அரசாங்கத்தைப் பற்றி இழிவாகப் பேசினல் அந்தக் கேள்விக்கு சம்மதம் கிடைக்காது.

10th September 1960]

SRI A. VEDARATHNAM: ரொம்ப ஜாக்கிரதையாகப் பேசுகிறேன். சம்பந்தம்............

MR. SPEAKER: சம்பந்தம் இருக்கிறதா இல்லையா என்று சபாநாயகர் சொல்லவேண்டும். சம்பந்தமில்லாவிட்டால், "அவுட் ஆப் ஆர்டர்" என்று சொல்லிவிடுவேன்.

SRI A. VEDARATHNAM: சட்டசபை கூட்டம் இன்று முடிவடைவதால், காவேரித் தண்ணிர் நாளுக்குநாள் குறைந்து வருகிற காரணத்தால் முன் குறிப்பிட்டபடி முறை ஸிஸ்டத்தை அமுலுக்கு கொண்டு வர உத்தேசம் அரசாங்கத்திற்கு உண்டா? அப்படியானல் போதிய காலத்தில் அறிவித்தால் விவசாயிகளுக்கு உதவியாக இருக்கும். அதுபற்றி தயவுசெய்து கனம் அமைச்சர் அவர்கள் அறிவிப்பார்களா?

THE HON. SRI P. KAKKAN: தஞ்சை மக்களுக்கு தண்ணீர் தட்டு இல்லாமல் கொடுக்கவேண்டும் என்பதுதான் இந்த அரசாங்கத்தின் முக்கிய அவா. செப்டம்பர் வரை இருக்கிறது. பின், தண்ணீர் குறைந்தால், பின்னர் ஏற்பாடு செய்யலாம்.

SRI R. SRINIVASA IYER: அக்ரிமெண்ட்படி நமக்கு தண்ணீர் சரியாக வந்து கொண்டிருக்கிறதா என்று பரிசீலனை செய்யப்பட்டதா? அப்படி பரிசீலனை செய்யும் நோக்கம் சர்க்காருக்கு உண்டா?

THE HON. SRI P. KAKKAN: பரிசீலனை செய்துதான் அப்போதைக்கப்போது இந்த சபையில் பதில் சொல்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: காவேரிக்கு நியாயமாக வரவேண்டிய ஜலம் வேறு பகுதிகளுக்கு திருப்பப்படுகிறது என்று ஏதாவது இந்த அரசாங்கத்திற்கு இந்தச் சபை அங்கத்தினர் ஒருவர் மூலம் புகார் வந்ததா? அதைப் பரிசீலித்துப் பார்த்தார்களா?

THE HON. SRI P. KAKKAN: ஸ்ரீனிவாஸ ஐயர் அவர்கள் ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்கள். அது, அரசாங்கத்தின் கவனத்தில் இருந்து வருகிறது.

SRI S. NAGARAJA MONIGAR: கண்ணம்பாடி அணைக்குக் கீழ், அதில் சேரும் உப நதிகளுள்ள பிராந்தியங்களில், மைசூர் ராஜ்யத்தில் மழையில்லாததால் இங்கு தண்ணீர் வரவில்லை என்று சர்க்கார் கருதுகிறதா?

MR. SPEAKER: The question is out of order.

SRI K. VINAYAKAM: இங்கு காவேரிக்கு வர வேண்டிய தண்ணீர் எவ்வளவு அல்லது அதில் நமக்கு தர வேண்டிய பங்கை ஒரு வேளை தடை செய்கிறார்களா இல்லையா என்று பார்க்க நம் அரசாங்க என்ஜினியர்கள் அங்கு அடிக்கடி போய்

[10th September 1960

கணக்கு எடுப்பது வழக்கம். அப்படி இப்பொழுது வழக்கமாக எடுக்கிறார்களா? அந்த லெஜிட்டிமேட் ட்யூட்டியை தடுப்பதற்கு யாராவது ஏதாவது செய்கிறார்களா?

MR. SPEAKER: The hon. Member has put his question very cleverly. (Laughter). It is out of order.

*Land Colonizing Societies*

*611 Q.—SRI S. M. ANNAMALAI: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

*1959–60-ல் நிலமில்லாத விவசாயிகளுக்கு எந்தெந்த இடங்களில் நிலக்காலனி சொசைடிகள் ஆரம்பிக்கப்பட்டன?*

THE HON. SRI P. KAKKAN: A statement [a] showing the places where the land colonisation societies were organised during 1959-60 is placed on the Table of the House. The question of giving financial assistance to the societies is under the consideration of the Government.

SRI S. M. ANNAMALAI: மேஜை மீது வைக்கப்பட்டிருக்கிற அறிக்கையில் வட ஆற்காடு மாவட்டத்தில் ஒன்று கூட காணோம். காரணம் என்ன? அந்த மாவட்டத்தில் ஏதாவது சொஸைட்டிகள் ஆரம்பிக்கவேண்டுமென்று மனு வந்ததா? அதை பரிசீலித்தார்களா?

THE HON. SRI P. KAKKAN: சொஸைட்டி ஆரம்பிக்கிறதாகயிருந்தால் போதுமான இடங்கள் இருக்க வேண்டும். என்னிடமுள்ள தகவல்படி, இந்த ஜாபிதாவில் உள்ள இடங்களில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. நிலங்கள் இருந்தால் பின்னால் கவனிப்பார்கள்.

*612 Q.—SRI P. G. MANICKAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

*(அ) 1960–61-ம் வருடத்தில் ஹரிஜன விவசாயிகளுக்கு எத்தனை நிலக்குடியேற்ற சங்கங்கள் ஏற்படுத்துவதற்கு திட்டமிடப்பட்டிருக்கிறது?*

*(ஆ) பதிவு செய்யப்பட்டிருக்கும் நிலக்குடியேற்ற சங்கங்களிலே எத்தனை ஹரிஜன விவசாயிகள் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள்?*

THE HON. SRI P. KAKKAN: (*a*) It is not possible to indicate any definite figure as the Organisation of Land Colonisation Co-operatives depends on various factors like the availability of lands, provision of funds, etc.

(*b*) About 3,094.

[a] Printed as Appendix V on page 674 infra.